உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - புரட்டாசி - 2018 - செப்டம்பர்   இதழ் - 75

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

பொன்மேனி கொண்டானைப் பூவின் மேலோன்
போற்றிசெய அருள்வானைப் பொங்கு கங்கை
புரிசடைமேல் ஏற்றானைப் பூத லத்தார்
புண்ணியனே எனப்போற்றப் பொலிவான் தன்னைத்
தன்மேனி தனில்பாதி உமையாள் கொள்ளத்
தந்தானை மணங்கொண்ட மறைகள் போற்றும்
தயங்கிழையாள் வன்னிவனம் தனில மர்ந்த
தண்ணிவு முகத்தாளைச் சாலி வாடி
மன்னியருள் செய்வாளை மாத வத்தோர்
மனமிருக்கும் சிற்பரையை நெல்லை என்னும்
மாதரசி திருவடிவை மனது வைத்து
மகிழ்வாரைக் காக்கமனம் கொண்டு வக்கும்
அன்னையினை ஆரணங்கை அம்பு யச்சீர்
அடியாளைக் கொற்றவாள் ஈசனுக்கே
ஆளான அரிவையினை மதுரச் சொல்லால்
அன்புசெயும் பெண்ணுக்கே அடிமை யாவோம்

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

மனிதர்கள் தம்முடைய கடமைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்காகப் பல்வேறு முயற்சிகளையும் செயல்பாடுகளையும் செய்தல் அவசியமாகிறது. ஒரு மனிதன் தான் ஏற்றுக்கொண்ட கடமைகளைச் செம்மையாகவும் சிறப்பாகவும் செய்ய வேண்டியது மிக்க அவசியம். இதில் தவறு ஏற்பட்டால் அதற்குப் பொறுப்பு அவரே ஏற்க வேண்டும். அப்படியே அவற்றால் கிடைக்கக் கூடிய பலன்களை ஈஸ்வரன் அருளால் எண்ணித் துய்க்க வேண்டும். கர்மங்களை ஆற்றுவது நம் கடமை; பலன்களைப் பெற வேண்டியது பரம்பொருள் அருள். இதுவே ஆன்மீகவாதிகளின் சிந்தனையாக இருக்க வேண்டும்.

நம் கடமைகளைச் செம்மையாகவும் சீராகவும் செய்து முடித்துவிட்டேன் என்று எண்ணுவது மனிதர்களின் எதார்த்த நிலை. கடவுளின் அருளாலே என்னால் காரியங்களைச் சிறப்பாக செய்து முடிப்பேன் என்பது ஆன்மீகவாதிகளின் எதார்த்த உணர்வு நிலை. இவை தவிர என்னுடைய முழுமையான ஆற்றலாலே காரியங்களைச் சீராக செய்வது என்று எண்ணுவது அகம்பாவத்தின் தொடக்கம்.

என்னால் முடியும் என்று நம்புவது தன்னம்பிக்கை. என்னால் மட்டுமே முடியும் என்பது அகந்தை. நான் செய்கின்ற காரியங்களிலே என்னுடைய ஆற்றலே முதல் காரணம். கடவுள் அருள் தேவையில்லை என்பது அகம்பாவத்தையும் தாண்டி நாத்திக உணர்வு.

மனிதனைப் பொறுத்த வரையில் உலகில் தோன்றிய பின்னர் அவரவருக்கு உரிய கடமைகளை, காரியங்களைச் செய்தே ஆக வேண்டும். அவற்றைக் கடவுள் பெயராலோ விதியின் பெயராலோ மன கற்பனையின் வசத்தாலோ நிறைவேற்றாமல் ஒதுக்குவது மனிதத்துக்கு அழகில்லை; அவர் வாழ்வில் உயரவும் வழியில்லை.

நமக்கு விதிக்கப்பட்ட கடமைகளைச் சரிவர நம்மால் இயன்றவரை செய்து முடித்தே ஆக வேண்டும். நல்ல முறையில் நிறைவேற்றுவதற்குக் கடவுளின் அருளை வேண்ட வேண்டும். அதனால் வருகின்ற பலன் ஈஸ்வரனை (ஈஸ்வர அர்ப்பணம்) சேர்ந்தது என்று தன்னலமற்ற தியாக உணர்வோடு காரியங்களைச் செய்வது எல்லா மனிதர்களுக்கும் நிம்மதியான வாழ்வைக் கொடுக்கும். இம்மை மறுமை நன்மைகளையும் அளிக்கும் காரியங்களையும் சரிவரச் செய்து உயர்வோமாக! இறையருள் உதவி புரியுமாக.

*ஸ்ரீ சற்குருநாதன் துணை.*



# பட்டினத்தார் பைந்தமிழ் - 19

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பதினோராம் திருமுறையில் பட்டினத்தார் பாடிய ஐந்து நூல்களுள் கோயில் நான்மணிமாலை, திருக்கழுமல மும்மணிக்கோவை, திருவிடை மருதூர் மும்மணிக் கோவை என்ற மூன்றும் சோழ நாட்டுத் தலங்கள், அடுத்தான திருஒற்றியூர் ஒருபா ஒருபஃது, திருஏகம்பம் உடையார் திருவந்தாதி என்ற இரண்டும் தொண்டை நாட்டுத்தல நூல்கள்.

சோழ நாட்டின் வட எல்லைப் பிரிவே தொண்டை நாடு. இதன் தலை நகரம் காஞ்சிபுரம், நகரங்களில் சிறந்தது காஞ்சி என்று கூறுவர், மேலும் புண்ணிய நகரான காஞ்சிக்கு ஒருவீசம் பெரிதானது காஞ்சி என்றும் புகழ்வர். ஏனெனில் காசி எனும் சொல்லுக்கு இடையில் மெல்லின ஞ் சேரக் காஞ்சியானதால் அதாவது ஓர் எழுத்து கூடுதலாகச் சேர்வதால் பெருமையும் கூடிய நகராகக் காஞ்சிபுரத்தைப் புகழ்தல் வழக்கமாகும்.

இந்தப் பெருமை பொதுவானாலும் நகரத்தாரைப் பொறுத்தமட்டில் காஞ்சியம்பதி அவர்களுக்கு வாழ்வளித்த புண்ணிய நகரமாகும். பூம்புகாரில் ஏற்பட்ட கடல் கோளால் அந்நகரினை விட்டு வெளியேறி அடைக்கலமாக வந்து தங்கிய நகர், காஞ்சிபுரமே ஆகும். அங்கிருந்துதான் தெற்கே பாண்டியநாடு நோக்கிப் பயணப்பட்டார்கள் என்று நகரத்தாரின் தொடக்ககால வரலாறு குறிக்கின்றது. அந்த வகையில் பட்டினத்தாரின் ஈடுபாடு திரு ஏகம்பரிடம் இயல்பாக இருந்ததில் வியப்பில்லை எனலாம். அதனால் தான் தங்குலத்தோர் வாழ இடங்கொடுத்த காஞ்சியின் பழமையைப் போற்றி நன்றியுடன் நினைக்கும் போது எப்படிப்பட்ட சிறப்பிற்குரியவராயினும் திரு ஏகம்பப் பெருமான் வீற்றிருக்கும் பண்டைக் குலத்தை வாழவைத்த திரு ஏகம்பத்தினை மறந்தவர்கள் வேட்டையாடித் திரியும் வேடுவர்களாகக் கருதப்படுவர் என்கிறார் அடிகள்.

*நிலத்திமை யோரில் தலையாப் பிறந்து மறையொடங்கம்*

*வலத்திமைப் போதும் பிரியார் எறிவளர்த் தாளுவெற்பன்*
*குலத்துமை யோர்பங்கர் கச்சியுள் ஏகம்பம் கூடித்தொழும்*
*நலத்தமை யாதவர் வேட்டுவர் தம்மின் நடுப்படையே!*

மேற்படியாகத் தங்குலத்தை வாழவைத்த பூமியைத் தொழும் பட்டினத்தார். அந்தப் பழமையின் வாசனையால் இந்தத் திருவந்தாதியாகிய நூறு பாடல்களை நன்றிப் பெருக்கால் பரமன் பாடவைத்தார் எனத்தம் சுய வரலாற்றைக் குறிப்பாகக் கூறினார்.

*காட்டிவைத் தார்தம்மை யாம்கடிப்*
*பூப்பெய்யக் காதவெள்ளம்*
*ஈட்டிவைத் தார்தொழும் ஏகம்பர்*
*ஏதுமி லாதஎம்மைப்*
*பூட்டிவைத் தார்தமக் கன்பது*
*பெற்றுப் பதிற்றுப் பத்துப்*
*பாட்டிவைத் தார்பர வித்தொழு*
*வாமவர் பாதங்களே! (99)*

கச்சி எகம்பரது திருவருள் துணையால் இவ்வந்தாதி பாடப்பட்டது எனப் பொதுவாகக் குறித்தாலும் ஏதும் இலாத எம்மைப் பூட்டி வைத்தார் தமக்கு அன்பு என்ற வரிதான் பட்டினத்தார் முற்றுந் துறந்தவராய், செல்வமெலாம் இல்லாதவராய் இருக்கும் நிலையில், பண்டை ஊழ்வினையைப் பூட்டி என்பது அன்பு பாராட்டித்தம்மை பாடுமாறு பணித்தார் இறைவன் என்கிறார்.

ஆக கச்சி ஏகம்பம் - தன்னை முழுவதுமாக ஆட்கொண்ட இடம் என்பதைத்தம் மூதாதையர்களான நகரத்தார்களுக்கு அடைக்கலம் தந்த நினைப்போடே பாடுவார் போல அகங்குழைந்து பாடுகிறார். தொண்டு செய்வதற்கே பிறப்பு எடுத்ததைப் போல வாழும் நகரத்தார்களின் இயல்பூக்கமான தொண்டைச் சிறப்பிக்குமாறு இந்நூலின் முதற் பாடல், அடிகளால் பாடப்பட்டுள்ளது.

*மெய்த் தொண்டர் செல்லும் நெறியறியேன்*
*மிகநற் பணிசெய்*

*கைத்தொண்டர் தம்மிலும் நற்றொண்டு*
*உவந்திலன் உண்பதற்கே*
*பொய்த்தொண்டு பேசிப் புறம்புறமே*
*உன்னைப் போற்றுகின்ற*
*இத்தொண்ட னேன்பணி கொள்ளுதியோ*
*கச்சி யேகம்பனே! (1)*

கச்சி ஏகம்பத்தில் எழுந்தருளி யுள்ள எம்பெருமானே! உண்மைத் தொண்டர்களின் ஞான நெறியறியேன். கைத்திருத் தொண்டு செய்யும் அடியார்களின் தொண்டைப் போல மனமுவந்து செய்யேன். இவைகளே யன்றி உடல் வளர்க்கும் உபாயத்திலேயே வாழும் என்னையும் ஏன்று கொள்வாயோ! எனப் பட்டினத்தார் தொண்டலால் உயிர்க்குத் துணையில்லை என்பதை நினைவூட்டுமாறு குறையிரந்து பாடுகின்றார்.

நகரத்தார்களின் தொண்டுகளுள் தெய்வத் தொண்டே தலையாயது என்பதால் அத்தொண்டும் சிவமூர்த்தமாக விளங்கும் தொண்டர்களுக்குத் தொண்டு செய்து அவர்களைத் தொழுதலே தொண்டின் பயன் என்றும் அச்சிவனையன்றிப் பிற தெய்வங்களை வணங்காத வைராக்கியமும் பற்றி நூலின் தொடக்கத்திலேயே பாடுகிறார்.

உனக்கு அடியார் அடிபூணத் தெளிந்தனனே - (3) என்பது திருவெண் காட்டடிகளின் கூற்று. இந்த மன உறுதியின் அடிப்படையில் தான் பின்னாளில் வரகவி பாடுவார் முத்தப்பச் செட்டியார் நகரத்தார்கள் பற்றிய குறிப்பில் நகரத்தார்கள் சிவ சம்பந்தபட்டவர்களன்றிப் பிற சமய சம்ந்தப்பட்டவர்கள் அல்லர் - என்பதைத் தலையாயபண்பாகக் குறித்துக் கூறியுள்ளார்.

மேலே சுட்டிய பாடலில் சிவத்தொண்டர்களைப் பட்டினத்தார் கைத் தொண்டினர் என்றார். பிறர் மூலம் தொண்டை நிறைவேற்றாமல் தாமே செய்யும் தொண்டுதான் கைத் தொண்டு, தொண்டை ஏவிச் செய்யாமல் தாமே செய்வது தான் கைத் தொண்டு. இவரைப் போன்றோரையே சேக்கிழாரும் கைத்திருத் தொண்டுசெய்கடப் பாட்டினார் என்றார்.

தொண்டின் சிறப்பைக் கூறிவரும் தொடர்ச்சியில் இறைவன் திருவடிக்குத் தொண்டு செய்பவர்கள் முன்பு எத்தகைய குற்றமுடையவராயினும் அவர்கள் இறைவனுக்கு ஆட்பட்ட பின்னர் அவரது குற்றங்கள் யாவும் நெருப்புமுன் பஞ்சு போல் பொசுங்கிவிடும் என்பதால் பட்டினத்தார் கடையாய்ப் பிறக்கினும் கச்சியுள் ஏகம்பத்து எங்களை ஆளுடையான் கழற்கு அன்பரேல் அவர் யாவர்க்கும் உத்தமரே என்று தொண்டர்களைப் போற்றித் துதிக்கின்றார்.

பற்பல தொண்டுகளால் உலகறிய வாழும் சிறப்பால் தான் பாரதியார் நகரத்தாராகிய ஒரு குலத்தாரை மட்டுமே பாடிச் சிறப்பித்தார், இத்தகு தொண்டைத்தம் குலத்தவரோடு ஆங்காங்கே சிறப்பித்துப் பாடும் பட்டினத்தார் தாம் பாடிய இந்த அந்தாதியைப் பல பரிமாணங்களோடு பாடியுள்ளார். சிவபெருமான் மாதொரு பாகராக உள்ள சிறப்பை 38 ஆம் பாடல் முதல் 44 முடிய விவரிக்கின்றார். இறைவன் குடி கொண்டிருக்கும் திருத்தலங்களாக 61 தலங்களின் பெயர் சுட்டிக் சிறப்பிக்கிறார். வெளிப்படையாகச் சுட்டும் தலங்களைப் போலச் சிலவற்றை வைப்புத் தலமாகக் கருதிப் பாடியுள்ளார்.

காஞ்சி நகரின் கவின் அழகைத் தொண்டை நாட்டு வளமாகச் சேக்கிழார் பாடுவதைப் போல் பட்டினத்தார் அகப்பொருள் சுவையில் உடன்போக்காகச் செல்லும் தலைவன் தன் தலைவிக்குக் கூறுவதாக 75 முதல் 85 வரையான பாடல்களில் கூறுகிறார். மேலும் காஞ்சிமா நகரில் உள்ள காம கோட்டம், கச்சி அறச்சாலை, ஊரகம், பாடகம் போன்ற திருக்கோயில்களின் சிறப்புக்களைக் கண்ணால் கண்டவாறாகச் சொல்லோவியமாய்த் தீட்டிக் காட்டுகிறார்.

இப்படிக் கோயில் நகரமாகத் திகழும் காஞ்சிபுரத்தில் கோயில் கொண்டுள்ள ஏகம்பத்தைத் தொழுவதால் பிறப்பினால் அடையக் கூடிய பயனைப் பெறற்றதாகப் பட்டினத்தார் பாடும் அழகே அழகு எனலாம். ஏனெனில் தாமே பாடினாலும் அகப் பொருள் நிலையில் பட்டினத்தார் தம்மைத் தலைவனாகப் பாவனை செய்து கொண்டு உடன்போக்கில் அழைத்துச் செல்லும் தலைவிக்கு, காமாட்சியம்மையார் மணலில் சிவலிங்கம் அமைத்து வழிபட்ட போது வந்த வெள்ளப் பெருக்கில், மணல் சிவலிங்கம் கரைந்து விடாதபடி

மார்புறத் தழுவி வழிபட்ட தழும்புடன் கூடிய சிவலிங்கத்தைக் காட்டிப் பிறவிப்பயனை அடைவதாகக் கூறும் பாடல், இல்லறத்தில் கணவன் மனைவியர் பிரிந்திலாது திருத்தலப் பயணத்தால் வழிபாடு செய்யத் தூண்டுவதாக உள்ளது.

*தளரா மிகுவெள்ளம் கண்டுமை*
*யோடித் தமைத்தழுவக்*
*கிளையார் வளைக்கை வடுப்படும்*
*ஈங்கோர் கிறபடுத்தார்*
*வளமாப் பொழில்திரு ஏகம்பம்*
*மற்றிது வந்திறைஞ்சி*
*உளரா வதுபடைத் தோம்மட*
*வாய்இவ் வுலகத்துளே! (85)*

இக்காஞ்சி மாநகரில் வாழும் தரத்தைப் படைத்தோம் என்பதாகக் கூறுவது. பிறந்தால் முத்தி எனப்படும் திருவாரூர்க்குக் காஞ்சியம்பதியும் சமமானது எனக் கூறுவார் போல் பட்டினத்தார் பாடுவது சிறப்பானதாகும்.

பாடலில் ஏகம்பம் மற்றுஇது வந்து இறைஞ்சி உளராவது படைத்தோம் என்ற தொடர் - நகரத்தார்கள் பூம்புகாரிலிருந்து காஞ்சிபுரத்தில் வந்து முதன் முதலில் தங்கி வாழ்ந்த இடம் எனக் கூறுதற்கான வரலாற்றுச் சான்றாக உள்ளது. அதாவது இந்தப் பாடற்கருத்தைத் தலைவன் கூற்றாக அமைத்த குறிப்பால் பட்டினத்தாரே பாடுவதான குறிப்பைத் தந்தது என்பது சிறப்பாகும்.

இந்தத் திருவேகம்பமுடையார் திருவந்தாதிப் பாடலைப் பகுதி பகுதியாகச் சுவைப்பதற்கேற்ற வகையில் அடிகள் பாடியுள்ளார். இறைவன் மாதொரு பாகத்தன் என்பதை முன்னரும் பாடிய நூல்களுள் பட்டினத்தார் பாடியுள்ளதைப் போல ஈண்டும் இவ் அந்தாதியில் 38ஆம் பாடல் முதல் 44 ஆம் பாடல்கள் வரைப் பாடியுள்ளார்கள், பாடப்பட்ட முறையிலும் ஓர் ஒழுங்கை உணர்த்துவதாக உள்ளது. வருணனையாகப் பாடும் விதமாக அர்த்தநாரி உருவத்தில் சடை முதல் (திருமுடி முதல்) அன்பர்கள் சரண்அடையும் திருவடிவரையாகப் பாடிய சிறப்பு பக்திப்பரவசத்தை ஊட்டுகிறது.

தமிழ் மொழியின் இலக்கண இலக்கியங்களில் அகப்பொருள் பாடப் பெற்றவைகள் மிகுதியாகும். இதனை அருளாளர்கள் நாயக நாயகி பாவனையாகப் பாடி இறைவனை அனுபவித்தனர். அவ்வழியே பட்டினத்தார் இந்த ஏகம்பமுடுடைய திருவந்தாதியை நாயக நாயகிப் பாடலாகவே பாடியுள்ளார். அகப்பொருட்குரிய எல்லாஅம்சங்களும் பொருந்தப் பாடியுள்ளார். அவற்றுள் ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறு பதமாக ஒன்றைக் கூறலாம்.

ஒரு தலைவன் தலைவி ஒருத்தியுடன் உடன் போக்காகப் போன நிலையில் மகளைக் காணாத தாய் மனம் அலமந்து அங்குமிங்குமாகத் தேடுகிறாள். அங்ஙனம் தேடித்திரியுங்கால் வழியில் வந்த ஆண்பெண் இருவரைப் பார்த்து உம்போல் இருவர் சென்றதைப் பார்த்தீர்களா! என வினவுகிறாள். கேட்ட ஆடவன் தாயே! இறைவனாரின் வாகனம் போன்றதான காளையைப் போன்ற ஒருவனைக் கண்டேன், ஆனால் நீங்கள் கேட்ட மற்றொருத்தியைப் பற்றி என்னுடன் உள்ள மங்கையைக் கேட்டறிந்து கொள்வீராக என்றான்.

எதிர் வந்த இருவரையும் பார்த்தாளாயினும் விடை கூறும் போது நளினமாகச் செய்தியைப் பரிமாறும் போது தான் பண்பாட்டை உணருமாறுள்ளளது.

இன்னொருவனுடைய உடைமைப் பொருளாக உள்ளவனைப் பற்றிக் கூறுவது பண்பாடன்று என்பதால் தன்னுடன் வந்தவள் மூலம் உரைக்கச் செய்தது இல்லற மாண்பை உணர்த்துவதாகும். இந்தக் கருத்து பட்டினத்தார்க்கு முன்பே வாழ்ந்த மணிவாசகர் திருக்கோவையார் என்ற அகச்சுவை நூலில் பாடிக்காட்டியது போல் உள்ளதாகும் எனலாம்.

துணை ஒத்த கோவையும் (கோ - ஆண்மகன்) பேதையும் (பெண்) காதலொடு ஏகினரே! - எனத்தாய் கேட்பதாகப் பட்டினத்தார் பாடலில் பாடப்பட்டுள்ளது. அதற்கு விடையாகத் தலைவன்,

*அணை அத்தர் ஏறு ஒத்தர் காளையைக்*
*கண்டனம் மற்றவரேல்*

*பிணைஒத்த நோக்குடைப் பெண்ணிவள்*
*தன்னொடும் பேசுமினே! (73)*

என்றார். உமை ஒருபாகர் ஏறிவரும் காளை போன்ற ஆடவனைப் பார்த்தேன். ஆனால் அவனுடன் வந்த பெண்பற்றிய விவரத்தை என்னுடன் வந்த இவளிடம் கேட்டறிக என்றான். இதில் அகச்சுவை ஒருபுறமாயினும் தெய்வீகத் தோடு அச்சுவை பரிமாறப்பட்டுள்ளது தான் பட்டினத்தார்க்குள்ள சமயப் பற்றின் அடையாளமாகும்.

மணிவாசகர், இருவர் முன்போயினரோ! எனத் தாய் கேட்க, ஆளியன்னாளைக் கண்டேன், அயலே தூண்டா விளக்கனையாய்! என்னையோ! அன்னை சொல்லியதே எனத்தலைவன் கூறுவதாகப் பாடியுள்ளார்.

முன்னோர் மொழிபொருளைப் பொன்னே போல் போற்றல் என்ற மரபுப்படிப் பட்டினத்தார் பாடியுள்ளார். இவ்விரண்டில் மணிவாசகரைவிடக் கூறும் விடையில் ஒன்றைக் கூடுதலாகக் கூறுவது தான் நகரத்தாரின் சிவப்பற்றை அறிய வாய்ப்பாக உள்ளது.

மணிவாசகரின் தலைவன், எதிர்வந்த தலைவனை வெறும் ஆளி என்றான். (ஆளி - சிங்கம்) ஆனால் பட்டினத்தார் தலைவன், அர்த்தநாரியாக விளங்கும் சிவன் ஏறும்காளை போன்றவன் என்றதால் பக்திப் பெருக்கை உணரச் செய்கின்றதன்றோ?

அகப் பொருள் மரபுகளைப் பல்வேறாகப் பல பாடல்களில் கூறும் பட்டினத்தார் ஆங்காங்கே சைவசமயக் கோட்பாட்டையும் வலியுறுத்தும் வகையில் பாடல் பாடியுள்ளார். திருநீற்றின் சிறப்பை இவர்போல் பாடியிருக்க வில்லை எனலாம். நீறில்லா நெற்றிபாழ் என்று ஔவையும் திருவெண்ணீறணியாத திருவில் ஊரும் என அப்பரடிகளும் நீறிடாதவரைக் கண்டால் அம்ம நான் அஞ்சுமாறே என மணிவாசகரும் கூறினர். பட்டினத்தாரோ நீறு இலரேல் என்றும் அரசும் முரசும், பொலியா இருநிலத்தே என நாடாளும் வேந்தன் நீறணிய வேண்டும்எனக் கூறியது புதுமையாக உள்ளது. திருநீறு என்றாலே மங்கலத்தைக் குறிக்கும். இம் மங்கலத்தை மறவா திருத்தலே நகரத்தாரின் இலக்கணமாகும்.

அடுத்து சைவசித்தாந்தத்தின் மணிமுடியாகத் திகழும் சிவஞான போதத்தின் நூற்பாக்களின் சாரமாக ஒரு பாடலைக் கூறி அந்தாதி நூலை நிறைவு செய்கிறார். பாசம் நீங்கப் பெற்ற ஆன்மாவுக்குச் சிவப்பேறு உண்டாகும். இச்சிவப் பேற்றை ஆன்மா, உடம்பொடு கூடிய பிறவியிலேயே அடையும் என்பது சித்தாந்த மெய்ப் பொருள்சாரம். இந்த விதிப்படி, ஏகம்பருக்குத்திருப் பணிகளை இன்று செய்வோம் நாளை செய்வோம் என இல்லாமல் அப்போதைக்கப் போதே செய்திடல் வேண்டும் என்கிறார் பட்டினத்தார்.

*இன்றுசெய் வோம்இத னில்திரு*
*ஏகம்பர்க்கு எத்தனையும்*
*நன்று செய்வோம் நாளை என்று*
*உள்ளி நெஞ்சே! உடலில்*
*சென்றுசெய் யாரை விடும்! துணை*
*நாளும் விடாதடிமை*
*நின்றுசெய் வாரவர் தங்களின்*
*நீள்நெறி காட்டுவமே! (98)*

இதில் ஆன்மாவைச் சுமக்கும் உடலிருந்தும் பயனில்லை. சுமக்கும் உடலால் ஆன்மா உய்திபெறுதலே கடன் எனக்கூறுவதால் உடல் பெற்றதால் உயிர் உய்தியடைதலே வாழ்வின்சாரம் ஆகும்.

ஆக, பட்டினத்தார் பைந்தமிழ்க் கருத்துக்களைப் பதினோராம் திருமுறையில் பாடிய ஐந்துநூல்களால் உணர்ந்தாலும் திருமுறையில் சாராத அவர்தம் பாடல்களும் வாழ்வியலோடு ஒட்டி இன்புறத்தக்கவையாகும்.

*(தொடரும்...)*

**01.09.2018 அன்று இலக்கியப்பூங்கா நிகழ்ச்சியில்**
**சிலப்பதிகாரத்தில் மங்கல வாழ்த்து என்னும் தலைப்பில்**
**காப்பியக் கவிஞர் சொற்பொழிவாற்றினார்.**

# சிலம்பில் வைணவம்

முனைவர். கரு.முத்தையா

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தை நமக்குத் தந்த இளங்கோவடிகள் எந்தச் சமயத்தைச் சார்ந்தவர் என்பதை உறுதியாகச் சொல்ல இயலவில்லை ஆயினும் அவர்சமண சமயத்தவர் என்ற கருத்தைப் பரவலாக ஆய்வுலகம் ஏற்கிறது. அதே நேரத்தில் அவர் சமயக் காழ்ப்புணர்வு இன்றிப் பிறசமயக் கருத்துக்களையும் சிறப்பாகச் சொல்லியிருக்கிறார் என்பது நூலை நுணுகிப் படிப்போர்க்குப் புலப்படும். அவ்வாறு அவர் கூறிய சமயக் கருத்துக்களுள் வைணவ சமயத்தை அவர் எப்படிப் போற்றியுள்ளார் என்பதை ஒரு புதிய கோணத்தில் காண்பதே இக்கட்டுரை.

**திருமால் :**

வைணவத்தின் முழு முதற்கடவுள் திருமால். அவர் என்ன தோற்றத்தவர், என்ன இயல்பினர்; எச்செயல்களை யெல்லாம் செய்த பெருமையுடையவர் என்பவற்றை வைணவத்தை விளக்கும் புராணங்கள் விரிவாகச் சொல்கின்றன. அவற்றுள் எந்தக் கருத்துக்களை யெல்லாம் இளங்கோவடிகள் கூறுகிறார் என்பதை முதலில் பார்க்கலாம்.

திருமால் நீலநிறமேனி உடையவன். அவன் ஆதிசேடன் எனும் ஆயிரம் தலைப்பாம்பின் மீது படுக்கை கொண்டுள்ளான். அவன் துயின்றாலும் உலகில் நடப்பவற்றை அறிந்து கொண்டே துயில்வான் என்ற செய்திகளை அடிகள்

*ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்*
*பாயல் பள்ளி ... கிடந்த வண்ணம் (11 - 35 - 10)*

என்றும் "
அணிகிளர் அரவில் அறிதுயில் அமர்ந்த மணிவண்ணன்" (10 - 9 - 10)
என்றும் குறிப்பிடுகிறார்.

அவன் மார்பில் இலக்குமி உறைகிறாள் என்பதும் அவன் வலக்கையில் சக்கரமும், இடக்கையில் சங்கும் ஏந்தியுள்ளான் என்பதும், அவனது உந்திக் கமலத்தில் இருந்து தான் பிரமன்

தோன்றினான் என்பதும் திருமாலைப் பற்றிய வைணவ சமயக் குறிப்புக்கள்.

*இவற்றைச் சிலம்பு,*

*திருவமர் மார்பன் (11 - 40)*

என்றும்,

*பகையணங் காழியும் பால்வெண் சங்கமும்*

*தகைபெறு தாமரைக் கையின் ஏந்தடி (11 - 50 - 51)*

என்றும்,

*வேத முதல்வன் பயந்தோன் (14 - 48)*

என்றும் கூறுவதோடு, திருமாலில் ஊர்தி கருடன்

என்பதை, புள்ஊர் கடவுள் (17 - 28) என்றும் குறிப்பிடுகின்றது.

பாற்கடல் கடைந்து அமிர்தம் எடுத்த நிகழ்வை ஒவ்வொரு புராணமும் ஒவ்வொரு மாதிரிச் சொல்கின்றன. வைணவம் தொடர்பான புராணம் திருமால் தான் பாற்கடலைக்க கடைந்ததாகச் சொல்கிறது. அதனை இளங்கோவடிகள்,

*வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்*

*கடல் வண்ணன் பண்டொருநாள் கடல் வயிறு கலக்கினையே (17 - 32)*

என்று பேசுகிறார்.

இவ்வாறு வைணவத்தின் முழுதற் கடவுளாகிய திருமாலைப் பலவாறாக வருணித்துப் பாராட்டும் சிலம்பு, திருமால் மச்சம் முதலாகக் கண்ணன் ஈறாக எடுத்த ஒன்பது அவதாரங்களுள் ஐந்து அவதாரங்களில் அவன் செய்த செயல்களின் சிறப்பைப் பாராட்டிப் பேசுவது எவ்வாறு என்பதை, ஒவ்வோர் அவதாரமாகக் காணலாம்.

**நரசிம்மாவதாரம் :**

நரசிம்மாவதாரம் பற்றி ஒரே ஓரிடத்தில் ஒரே ஒரு வரியில் குறிப்பிடுகிறார் அடிகள்.

*மடங்கலாய் மாறட்டாய் (17 - 24)*

மடங்கல் என்றால் சிங்கம். குரவைக் கூத்தாடும் ஆய்ச்சியர் திருமாலை நோக்கி நீசிங்கமாக வந்து தீயவனாகிய (மாறு) இரணியனைக் கொன்றாய் (அட்டாய்) என்று பேசுவதைக் காண்கிறோம்.

**வாமனாவதாரம் :**

வாமனாவதாரத்தில் திருமால் செய்த செயல்களுள் இரண்டைச் சிலம்பு குறிப்பிடுகிறது. நிலத்தை அளப்பதற்காக வாமனன் எடுத்த பேருருவம் ஒன்று. அவன் ஈரடியால் இவ்வுலகு முழுவதையும் அளந்தான் என்பது மற்றொன்று. இவ்விரு செய்திகளையும் இளங்கோவடிகள் ஒன்றுக்கு மேற்பட்ட இடங்களில் குறிப்பிடுகிறார்.

*நெடியோன் கோயில் (5 - 172)*
*நெடியோன் குன்றம் (8 - 1)*

நெடியோன் என்பது வாமனன் எடுத்த பேருருவைக் (விஸ்வரூபம்) குறிக்கும்.

*அவன் உலகளந்த செய்தியை, இரண்டடியான் மூவுலகும் இருள் தீர நடந்தனை (17 - 34)*
என்றும்

*மூவுலகும் ஈரடியால் முறை நிரம்பாவகை முடியத்தாவிய சேவடி (17 - 35)*
என்றும் குறிப்பிட்டுப் பாராட்டுகிறது. சிலம்பின் ஆய்ச்சியர் குரவை.

**பலராமாவதாரம் :**

இந்த அவதாரத்தின் செயல் எதனையும் சிறப்பாக இளங்கோவடிகள் சுட்டவில்லை. ஆனால் அவர் காலத்தில் தமிழகத்தில் பலராமனுக்குத்தனிக் கோவில்கள் இருந்தன என்ற குறிப்பை அவர் பூம்புகார் நகர வருணனையில் குறிப்பிடுகிறார்.

*வால்வளை மேனி வாலியோன் கோயில் (5-171)*

பலராமன் வெண்ணிறத்தவன் என்ற இயல்பையும் இத்தொடரின் வாலியோன் என்ற சொல் விளக்குகிறது. பலராமன் கண்ணனுக்கு மூத்தவனாகப் பிறந்தவன் என்பதை அடிகள் ஆய்ச்சியர் குரவைப் பகுதியில்.

*மாயவன் தன் முன்னினோடும் (17-28)*
என்று குறிப்பிடுகிறார்.

**இராமாவதாரம் :**

இராமாவதார நிகழ்ச்சிகளுள் சிலவற்றைச் சிலம்பு சிறப்பாகக்

குறிப்பிடுகிறது. தயரதன் ஆணையை ஏற்று இராமன் காடு சென்றான். அவ்வாறு அரசைத் துறந்து காடு செல்லும் போது மனைவியோடும், தன் தம்பி இலக்குவனோடும் சென்றான். காட்டில் தன் மனைவியைப் பிரிந்து துன்புற்றான் என்ற செய்திகளை வெவ்வேறு பாத்திரங்கள் வாயிலாக இளங்கோவடிகள் சுட்டிச் செல்கிறார்.

*பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்*
*அரசோ தஞ்சம் என்று அருங்கான்*
*அடைந்த அருந்திறல் (13-63-65)*

என்பது கோசிகமாணியின் கூற்று.

தாதை ஏவலில் மாதுடன் போகிக் காதலி நீங்கக் கடுநந்துயர் உழந்தோன் (14-46-47)

என்பது கவுந்தியடிகளின் கூற்று.

*தம்பியொடும் கான் போந்து (17-35)*

என்பது குரவைக் கூத்தாடும் ஆய்ச்சியர் பாடல்.

இராமன் இலங்கையில் பெரும் போர் நிகழ்த்தினான் என்பதைச் சிலம்பு நூளாசிரியர் கூற்றாகவே கூறுகிறது. செங்குட்டுவனின் வடபுலப் போர் பற்றிக் கூறும் போது

*இலங்கையில் எழுந்த சமரம் (26-238)*

என இராம இராவணப் போரைக் குறிப்பிடுகிறார் அடிகள். அப்போரில் இராமன் பெற்ற வெற்றியை ஆய்ச்சியர் குரவை

*தொல் இலங்கை கட்டழித்த சேவகன் (17-35)*

என்று குறிப்பிட்டுப் போற்றுகின்றது.

**கிருஷ்ணாவதாரம் :**

திருமால் கண்ணனாகப் பிறந்த அவதாரமாகிய கிருஷ்ணாவதாரத்தைப் பொறுத்தவரை அவனது அவதார நிகழ்வுகள் அனைத்தையும் சிலம்பு விரித்துப் பேசுகிறது.

கண்ணன் தேவகி வயிற்றிற் பிறந்தான். ஆனால் அசோதையின் மகனாகத்தான் வளர்ந்தான். எனவே,

*ஆயர் பாடியின் அசோதை பெற்றடுத்த*
*பூவைப்புதுமலர் வண்ணன் (16-46-47)*

என்று மாதரி கோவலனைக் கண்ணனாகவும், கண்ணகியை நப்பின்னையாகவும் பார்த்து, வியந்து பாராட்டுகிறாள்.

கண்ணனின் தீராத விளையாட்டுச் செயல்களை யெல்லாம் குரவைக் கூத்து நிகழ்த்தும் ஆய்ச்சியர் பரந்துபடப் பேசுகின்றனர். பிள்ளை நிலையிலேயே கண்ணனைக் கொன்று விடக் கம்சன் அனுப்பிய அசுரன் ஒருவன் மரமாக நிற்க, மற்றொருவன் காளைக் கன்றாக வருகிறான். அந்தக் கன்றையே ஆயுதமாக்கிக் குருந்த மரத்தை அழித்தான் கண்ணன்.

*கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன் (17-19)*
*கொல்லைப் புனத்துக் குருந்தொசித்தான் (17-17)*
என்று ஆய்ச்சியர் பாடுகின்றனர்.

கண்ணன் மண்ணுண்டு, அசோதை வாயைத்திறக்கச் சொன்ன போது வாயினுள் உலகையே காண்பித்தான்.

*உலகடைய உண்டனையே (17-33)*
என்பது ஆய்ச்சியர் குரவை.

அவனது குறும்புகளைத் தாங்க இயலாத அசோதை அவனைக் கட்டிப் போட்டாள் என்ற செய்தியை,
*அசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை (17-32)*
என்று பேசுவர் ஆய்ச்சியர்.

யமுனை ஆற்றில் குளித்த கோபியரின் ஆடைகளை அள்ளியெடுத்து ஒளித்து வைத்த கண்ணனின் செயலை,

*அறுவை ஒளித்தான் (17-23)*
என்று குறிப்பிடுகிறது சிலம்பு.

இவ்வாறெல்லாம் தீராத விளையாட்டுப் பிள்ளையாக ஆயர் பாடியில் வளர்ந்த கண்ணன்,
*மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம் கடந்து (17-37)*
துவாரகையின் அரசனானான். அதன் பின் பாண்டவர்க்கு உறவினனாகவும், நண்பனாகவும் இருந்து அவர்கள், பாரதப் போரில் வெற்றி பெறப் பல்லாற்றானும் உதவினான் என்பது கிருஷ்ணாவதாரத்தின் உயர்நிலைச் சிறப்பு ஆகும்.

அச்சிறப்பினையும் சிலம்பு பாராட்டுகிறது. போரைத் தவிர்க்கும் முயற்சியாகப் பாண்டவர்க்காகத் தூது சென்றான் கண்ணன், இதனை,

படர்ந்தாரணம் முழங்கப் பஞ்சவர்க்குத் தூது நடந்தான்

என்று சிலம்பு பேசுகிறது.

ஆனால் தூது தோல்வி அடைந்து, போர்தொடங்கிய நிலையில் பார்த்தனுக்குத் தேரோட்டியாக (சாரதி) அமைந்து, கண்ணன் பார்த்தசாரதி ஆன செயலை இளங்கோவடிகள் கவிக் கூற்றாகவே கூறுகிறார்.

*கடல் வண்ணன் தேர்ஊர் செரு (26-239)*

என்று செங்குட்டுவனின் வடபுலப் போரோடு, பாரதப் போரை ஒப்பிடும் போது கூறுகிறார்.

அந்தப் போரில் பாண்டவர் வெற்றிக்காக மாயச் செயல்கள், தந்திரம் மிக்க செயல்கள் பலவற்றைக் கண்ணன் செய்தான் என்பது மகாபாரதம் காட்டும் செய்திகள். அதில் ஒரு செயல் மறைந்திருக்கும் செயத்திரதனை வெளிக் கொணர்வதற்காக மறையாத சூரியன் மறைந்தது போன்ற தோற்றத்தை ஏற்படுத்தியது.

எவ்வாறெனின் கண்ணன் தனது சக்கரப் படையை வானில் ஏவி அது சூரியனை மறைக்குமாறு செய்தான். சூரியன் மறைந்ததாகக் கருதிச் செயத்திரதன் மறைவிடத்திலிருந்து வெளிப்பட்டான்; அருச்சுனன் அவனை அழித்து முடித்தான். இதனைச் சுருக்கமாக,

*கதிர் திகிரியான் மறைத்த கடல் வண்ணன் (17-26)*

என்று ஆய்ச்சியர் குரவை கூறுகிறது.

இதுகாறும் பார்த்த செய்திகளால், இளங்கோவடிகள் புராணங்களின் அடிப்படையில் திருமாலின் வண்னம், வடிவம், ஆயுதங்கள், செயல்கள் ஊர்தி, படுக்கை என அனைத்துச் செய்திகளையும் சிறப்பாகக் கூறியிருக்கிறார் என அறிகிறோம்.

திருமால் எடுத்த அவதாரங்களில் நரசிம்மன், பலராமன், வாமனன் என்ற அவதாரங்களின் இன்றியமையாச் சிறப்புக்களை எடுத்துக் காட்டியிருக்கிறார் என உணர்கிறோம்.

இராமன், கண்ணன் என்ற இரு அவதாரங்களின் செயல்களில் மிகவும் ஈடுபட்டுக்கவிக்கூற்றாகவும், பாத்திரங்களின் கூற்றுக்களாகவும் இவ்விரு அவதார நிகழ்வுகளைப் போற்றிப்புகழ்கிறார் என்பதைப் புரிந்து கொள்கிறோம்.

வைணவ சமயத்தின் பல்வேறு கூறுகளையும் நுணுகிப் பார்த்துப் போற்றிப் புகழ்ந்திருக்கும் இளங்கோவடிகளின் வைணவ அறிவு நம்மை வியப்பின் உச்சத்திற்குக் கொண்டு செல்கிறது என்பது மறுக்க இயலாத உண்மை ஆகும்.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

**அகப்பேய்ச் சித்தர் சிந்தனைகள்**

இவர் பதினெண் சித்தர்களில் ஒருவராகக் கருதப்படுகிறார். மனம் என்ற பேய் அங்குமிங்குமாக அலைகின்ற தன்மை கண்டு அதைப் பேயென உருவகம் செய்தமையால் இவர் அகப்பேய்ச் சித்தர் என்று அழைக்கப்பட்டார். படிப்படிபாகப் பின்வந்தவர்கள் இவரை அகப்பைச் சித்தர் என்றும் அழைக்கத் தொடங்கினர்.

இவருடைய குலம் நாயனார் குலம். துணி வணிகம் செய்து வாழ்ந்தவர். இதனால் பலதரப்பட்ட மக்களை இவர் சந்திக்க நேர்ந்தது. அவர்களில் மகிழ்ச்சியாக வாழ்வோரையும் மகிழ்ச்சியாக இருப்பதுபோல் நடிப்போரையும் காண்கின்றார். இதற்குக் காரணம் என்னவாக இருக்கும் என்று சிந்தித்தார். அவருக்கு ஒரு உண்மை புலப்பட்டது. மனம் அது கொண்ட ஆசையும் தான் துன்பத்திற்குக் காரணம் என்றறிந்தார்.

தன்னலம் கருதாது பிறர்நலம் கருதும் அவருக்குச் சோதி வீசுகின்ற ஒரு மரத்தைக் கண்ட போது ஞானம் பிறந்தது. எல்லாவற்றிற்கும் ஆசைப்படுவதே துன்பத்திற்குக் காரணம் என்று அறிந்தார். ஆசையை வென்றால் இன்பமயமான வாழ்வு கிடைக்கும் என்றறிந்தார். புத்தரும் அதைத்தான் உணர்ந்தார். ஆதலால் இருவரும் மனம் என்கின்ற அகப்பேயை அடக்கியவர்கள். எனவே இவரும் ஆசையை வென்றால்

இறைவன் காட்சி தருவான் என்பதை உணர்ந்தார். அதையே தம் பாடல்கள் மூலம் உணர்த்தினார். அதனால் மனம் அகம் அடங்க வேண்டும் என்பதை உணர்த்தும் சிந்தனைகளை வலியுறுத்துகின்றார்.

*நஞ்சு உண்ண வேண்டாவே - அகப்பேய்*
*நாயகன் தாள்பெறவே*
*நெஞ்சு மலையாதே - அகப்பேய்*
*நீ ஒன்றும் சொல்லாதே 1*

விளக்கம் - அகமாகிய பேயே! (பேய் என்று மனத்தை ஏன் உருவகப்படுத்துகிறார்? பேய் கட்டுக்கு அடங்காமல் அலைந்து திரியும்; அதுபோல மனமும் நிலைகொள்ளாமல் அலைகின்றது என்பதால்) ஆசை அகல வேண்டுமானால் அதாவது புலனடக்கம் வேண்டுமானால் அகத்தை அடக்க வேண்டும். ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள் ஈசனோடு ஆயினும் ஆசை அறுமின்கள் என்பது திருமூலர் வாக்கு. அப்படி அடக்கினால் ஈசன் திருவடியை அடையும் வழியை நீ சொல்ல வேண்டாம். எப்படி வாழ வேண்டும் என்ற முறையை வாழ்ந்து முடிந்தவனிடம் சொல்லாதீர்.

*பராபரம் ஆனதடி - அகப்பேய்*
*பரவையாய் வந்ததடி*
*தராதலம் ஏழ்புவியும் - அகப்பேய்*
*தானே படைத்ததடி 2*

விளக்கம் - கடல் போல் எங்கும் பரந்த நிலையில் இருக்கும் இந்த ஏழுலகங்களையும் இறைவன் தானே உண்டாக்கினான். மனமாகிய பேயே! யாருடைய உதவியும் இல்லாமல் தனியே இறைவன் படைத்தான். என் எனில் இறைவன் வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன்; அப்படியாயின் அவன் பேராற்றல் உடையவன் என்பது பொருளாகின்றதல்லவா? அவனை அடைய வேண்டுமெனில் அகத்தூய்மை வேண்டும்.

*நாத வேதமடி - அகப்பேய்*
*தன்னடக்கம் கண்டாயோ*
*பாதஞ் சத்தியடி - அகப்பேய்*
*பரவிந்து நாதமடி 3*

விளக்கம் - வேதங்களில் ஒலி வடிவாக இருப்பவன். தன்னடக்கம் உள்ளவன் என்பதை மனப் பேயே நீ உணர்வாயோ? உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன் என்பது சேக்கிழார் வாக்கு. வேதம் ஓதுவோர் உள்ளத்துள் இருப்பவன் என்பதே. அப்படியானால் அகம் ஆசையின்றி இருக்க வேண்டும் என்பதையே அகப்பேய்ச் சித்தர் வலியுறுத்துகின்றார்.

*விந்து நாதமடி - அகப்பேய்*
*மெய்யாக வந்ததடி*
*ஐந்து பெரும்பூதம் - அகப்பேய்*
*அதன்இடம் ஆனதடி* 4

விளக்கம் - ஒலி அதாவது ஒலியில் ஒரு புள்ளியாக இருப்பினும் அது மெய்யாக வந்தது என்பதை அறிக மெய். வாய், மூக்கு, கண், செவி என்ற ஐம்பெரும் பூதங்களுக்கு அவை இடமாக இருக்கின்றன.

*நாலு பாதமடி - அகப்பேய்*
*நன்னெறி கண்டாயே*
*மூலம்ஆனது அல்லால் - அகப்பேய்*
*முத்தி அல்லவடி* 5

விளக்கம் - மெய்யான ஒலிவடிவான நாலு வேதங்களும் நன்னெறி காட்டுவன என்பதைக் கண்டாயே அவை மெய்யானது இல்லை என்றால் முத்தி அல்ல என்பதை அறிவாய்.

*வாக்குஆதி ஐந்தடியோ - அகப்பேய்*
*வந்த வகைகேளாய்*
*ஒக்கமது ஆனதடி - அகப்பேய்*
*உண்மை அது அல்லவடி* 6

விளக்கம் - சொல் முதலாகத் தொடங்கி வரும் செயல்கள் உயர்வானது. அது எப்படி வந்தது என்ற வகையைக் கேள். அவை உயர்வானவை என்பதை அறிவாயாக. ஆனால் அவை உண்மை அல்ல.

*சத்தாதி ஐந்தடியோ - அகப்பேய்*
*சாத்திரம் ஆனதடி*

*மித்தையும் ஆகுமடி - அகப்பேய்*
*மெய்அது சொன்னேனே* 7

விளக்கம் - ஓசை முதலாக வருவன ஐந்து. அவையே சாத்திரங்கள் ஆயின. அவை பொய்யென்று சொன்னேன்.

*வசனாதி ஐந்தடியோ - அகப்பேய்*
*வண்மையாய் வந்ததடி*
*தெசநாடி பத்தேடி - அகப்பேய்*
*திடன்இது கண்டாயே* 8

விளக்கம் - ஒலி ஐந்துவகை பொதுவாய் வந்தவை. நாடி பத்து அவற்றைத் தசநாடி என்பர். அவை உறுதியான அதாவது நிலையானவை என்பதை அறிந்தாயே. அத்தி அலம்புடை. இடை காந்தாரி குகு.சங்கினி. சிருவை. சுழி முனை. பிங்கலை புருடன் என்பன.

தசநாடிகளின் விளக்கம் - (அத்தி - எலும்பு) (அலம்புடை - மூலாதாரம்) (இடை – மூக்கின் நடு எலும்பு) (காந்தாரி – கழுத்து நரம்பு) (குகு - அபானவாயு) (சங்கினி - தொடைப்பகுதி) (சிருவை - குறி) (சுழிமுனை – புருவ மத்தி) பிங்கலை – சந்திர கலை) (புருடன் – ஆன்மா)

*கராணம் ஆனது எல்லாம் - அகப்பேய்*
*கண்டது சொன்னேனே*
*மாரணங் கண்டாயே - அகப்பேய்*
*வந்தவிதங்கள் எல்லாம்* 9

விளக்கம் - அவற்றிற்கான காரணங்களை நான் கண்டறிந்தேன். அதனால் கண்டதைச் சொன்னேன். அவை மரணத்தை உண்டாக்கும் என்பதை அறிந்தாயா?

*ஆறு தத்துவமும் - அகப்பேய்*
*ஆகமம் சொன்னதடி - அகப்பேய்*
*மாறாத மண்டலமும் - அகப்பேய்*
*வந்தது மூன்றடியே* 10

விளக்கம் – ஆறுவகையான தத்துங்களை வேதம் சொல்கிறது. சூரிய

மண்டலம் சந்திர மண்டலம். பூமி என மூன்று; அவை நிலையானவை மாறாத தன்மை உடையவை.

*பிருதிவி பொன்னிறமே - அகப்பேய்*
*பேதைமை அல்லவடி*
*உருவது நீரடியோ - அகப்பேய்*
*உள்ளது வெள்ளையடி* 11

விளக்கம் - பூமியின் நிறம் பொன்னிறம். அது அறியாமை அல்ல. பெரியதாக இருப்பதே அதன் தன்மை. உள்ளே ஆழமானது.

*தேயு செம்மையடி - அகப்பேய்*
*திடனது கண்டாயே*
*வாயு நீலமடி - அகப்பேய்*
*வான்பொருள் சொல்வேனே* 12

விளக்கம் - தீயின் நிறம் செம்மை அது திடமானது. காற்று நீலமானது. அதன் பொருள் என்னவென்று சொல்வேன்?

*வான மஞ்சடியோ - அகப்பேய்*
*வந்தது நீகேளாய்*
*ஊனம்அது ஆகாதே - அகப்பேய்*
*உள்ளதைச் சொன்னேனே* 13

விளக்கம் - வானம் என்பது மேகக் கூட்டங்கள். அவை தோன்றிய தன்மையை நீ கேள். அது குற்றம் அற்றது உள்ளதை உள்ளபடி சொல்கிறேன்.

*அகாரம் இத்தனையும் - அகப்பேய்*
*அங்குஎன்று எழுந்ததடி*
*உகாரம் கூடியடி - அக்பேய்*
*உருவாகி வந்ததடி* 14

விளக்கம் - அத்தனையும் அகாரத்தில் எழுந்தவை. அதனோடு உகாரம் சேர்ந்தது. அதனால் உருவாகியது ஒ

*மாகாரம் மாயையடி - அகப்பேய்*
*மலமது சொன்னேனே*

*சிகார மூலமடி - அகப்பேய்*
*சிந்தித்துக் கொள்ளாயே* 15

விளக்கம் - மகாரம் சேர்வது மாயை. அதுவே மூலாதாரம். சிந்தித்து ஏற்றுக்கொள்.

*வன்னம் புவனமடி - அகப்பேய்*
*மந்திர தந்திரமும்*
*இன்னமும் சொல்வேனே - அகப்பேய்*
*இம்என்று கேட்பாயே* 16

விளக்கம் - இது அழகிய பூமி; மந்திர தந்திரங்கள் இங்கேதான். இன்னமும் சொல்வேன் இம் என்று கேட்பாயே.

*அத்தி வரைவாடி - அகப்பேய்*
*ஐம்பத்துஓர் அட்சரமும்*
*மித்தையாம் கண்டாயே - அகப்பேய்*
*மெய்யென்று நம்பாதே* 17

விளக்கம் - ஆனால் அவை மாறுபாடு உடையவை. ஐம்பத்தோர் அட்சரமும் பொய்யானவை. உண்மையானவை என்பதை நம்பாதே. மந்திரம் கால் மதி முக்கால் என்பது முதுமொழி.

அட்சரம் என்றால் எழுத்து என்று பொருள். ஒவ்வோர் எழுத்துக்கும் தேவிமார் உண்டு. அவை ஐம்பத்தொன்று. அவை யாவன.

1. அமிர்தா தேவி. 2. ஆகாஷாணி தேவி. 3. இந்திராணி தேவி. 4. ஈஷிணி தேவி. 5. உமா தேவி. 6. ஊர்த்வாகேஷி தேவி. 7. ருத்திராயி தேவி. 8. ரூகார தேவி. 9. லுகார தேவி. 10. லூகார தேவி. 11. ஏகபாத தேவி. 12. ஜஷவாயாதமிகா தேவி. 13. ஓம்கார தேவி. 14. ஔஷதா தேவி. 15. அம்பிகா தேவி. 16அட்சரா தேவி. 17. காராத்ரி தேவி. 18. கண்டிதா தேவி. 19. காயத்ரி தேவி. 20. கண்டகாஷிணி தேவி. 21. டார்ணா தேவி. 22. சாமுண்டா தேவி. 23. சயார்தா தேவி. 24. ஜயா தேவி. 25. ஜங்காரிணி தேவி. 26. ஞான ரூபா தேவி. 27. டங்கஹஸ்தா தேவி. 28. டாமரி தேவி. 29. ணராணீ தேவி.

30. தமஸ்யா தேவி. 31. ஸ்தாணவீ தேவி. 32. ஸதாணவீ தேவி. 33. தத்யா தேவி. 34. நார்யா தேவி. 35. பார்வதி தேவி. 36. பட்காரிணி தேவி. 37. பந்தினி தேவி. 38. பத்ரகாளி தேவி. 39. மகாமாயா தேவி. 40. யட்சாவினி தேவி. 41. ரக்தா தேவி. 42. லம்போஷ்டி தேவி. 43. வரதா தேவி. 44. திரு தேவி. 45. ஷண்டா தேவி. 46. சரஸ்வதி தேவி. 47. ஹம்வதி தேவி. 48. பந்த மோகினி தேவி. 49. சமா தேவி. 50. தாட்சாயணி தேவி. 51. தத்யா தேவி

*தத்துவம் ஆனதடி - அகப்பேய்*
*சகலமாய் வந்ததடி*
*புத்தியும் சொன்னேனே - அகப்பேய்*
*பூத வடிவம்அலவோ* 18

விளக்கம் - பூதம் ஐந்து. தன்மாத்திரை ஐந்து. ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, மனம், புத்தி, அகங்காரம், குணம், பிரகிருதி, இவை ஐந்து ஆகத் தத்துவம் ஐந்து இவை அனைத்தும் ஒன்றாய் வந்தவை, இவை எல்லாம் பூதவடிவம்

*இந்த விதங்கள எல்லாம் - அகப்பேய்*
*எம்இறை அல்லவடி*
*அந்தவிதம் வேறே - அகப்பேய்*
*ஆராய்ந்து காணாயோ* 19

*பாவம் தீரஎன்றால் - அகப்பேய்*
*பாவிக்கல் ஆகாதோ*
*சாவதும் இல்லையடி - அகப்பேய்*
*சற்குரு பாதமடி* 20

*(தொடரும்...)*



## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### மெய் காட்டியது

குலபூஷண பாண்டியன் தருமவழி நின்று சிறப்பான முறையில் அரசு செலுத்தி வந்தான். சுந்தரசாமந்தன் என்பவன் பாண்டியனது சேனாதிபதியாக இருந்தான். சாமந்தன் சிவனடியார்களையே சிவனாகப் பாவித்தவன். இம்மை மறுமை இரண்டுக்குமே மன்னனது உறுதுணையாக நின்றவன்.

அக்காலத்தில் சேதிராயன் என்ற குறுநில மன்னன் பல வெற்றிகள் பெற்று விளங்கினான். அதனால் கர்வம் மிகுந்தவனாகிப் பாண்டிய மன்னனையே பகைத்தான். பாண்டிய நாட்டின் மீது படையெடுக்கவும் எண்ணினான். சேதிராயன் படையெடுப்புக் கருத்தை அறிந்தான் குலபூஷணன். தனது சேனாபதி சுந்தரசாமந்தனைக் கூப்பிட்டு, நமது பொக்கிஷசாலையைத் திறந்து கொண்டு வேண்டிய அளவு பொருளை எடுத்துக்கொள். மேற்கொண்டு புதிய சேனைகளைச் சேர்த்துப் பதிவு செய்துகொள் என்றான்.

சாமந்தன் பொக்கிஷசாலையை நோக்கிச் சென்றான். சிவபெருமான் திருவருள் முன்னுக்கு இழுத்தது மன்னவன் கட்டளை பின்னுக்கு இருந்து தள்ளியது. பொக்கிஷத்தைத் திறந்தான், வேண்டிய அளவு பொன்னையும் மணியையும் வாரி எடுத்துக்கொண்டான். அளவற்ற சந்தோஷத்தோடு திருக் கோவிலுக்குப் போனான். பொற்றாமரைக் குளத்தில் நீராடினான். சோமசுந்தரப் பெருமானைத் துதித்து வணங்கினான். வேத முதல்வா! அடியார்கள் கருத்தறிந்து முடிப்பவனே! இப் பொருள்களெல்லாம் தேவரீருக்கும் தங்கள் அடியவருக்கும் அர்ப்பணம் என்று வேண்டிக்கொண்டான். பிற்பாடு அந்தப் பொருள் முழுவதையுமே சிவ சம்பந்தமான திருப்பணிகளில் ஈடுபடுத்தினான். திருக்கோவிலுக்குப் பணி பல புரிந்தான். தான தருமங்கள் பல செய்தான்; சிவக்கோலம் பூண்டவருக்கெல்லாம் அறுசுவையுடன் அமுது படைத்தான். இவ்வாறாக சுந்தரசாமந்தன்

நாள்தோறும் செய்து வருவதை ஒற்றர்கள் மூலமாகக் கேள்விப்பட்டான் பாண்டியன்.

ஆனால், சேனாதிபதி சுந்தரனோ ராஜ சபையில் தோன்றும் போதெல்லாம் ராஜ காரியம் பார்ப்பவன் போலவே பாவனை செய்து வந்தான். பொய்யாக ஓலைகளைப் பல நாடுகளுக்கு அனுப்புவது போலவும் பாவனை செய்தான். ஆனால் எங்கிருந்தும் எவரும் வந்து சேனையில் புதிதாகச் சேர்ந்தவர்களாகத் தெரியவில்லை. ஆறுமாத காலம் ஆகிவிட்டது. ஆதலால் ஒருநாள் குலபூஷணபாண்டியன் சுந்தரசாமந்தனை அழைத்து, நாளை சாயந்திரத்திற்குள்ளாக ஓலைவிடுத்து சேனா வீரர்கள் அனைவரையும் அழைத்துக் காட்டுவாய் என்றார்.

சுந்தரனும் அதற்கு உடன்பட்டான். நேராகத் திருக்கோவிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளின் திருவடியில் விழுந்து வணங்கினான். மதுரேசா! மன்னன் அளித்த மலையளவு பொருள்கள் அனைத்தையும் ஏற்றுக்கொண்டு அடியேனைப் பணி கொணண்டு அருளினீர்; இனி நான் சேனைகளை எவ்வாறு திரட்டு வது? என்று வினவி ஏங்கினான். யாம் நாளைக்குச் சேனா வீரர்களோடு உரிய காலத்தில் வந்து தோன்று வோம். நீயும் படைஞர் வரவை எதிர்பார்த்துப் பாண்டியனது சபையில் இருப்பாயாக என்று ஆகாசவாணி சொல்லியது. சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் சுந்தரன் ஆனந்த சாகரத்தில் மூழ்கினான்.

எப்போது விடியும்? என்ற நினைவோடு இரவைப் போக்கினான் சாமந்தன்.

சோமசுந்தரப் பெருமான் தனது கணங்களை வில் வீரர்களாகச் செய்தார். தாமும் குதிரை வீரனைப்போலக் கோலம் பூண்டார். விடியலாயிற்று. சுந்தர சாமந்தன் திருக்கோயில் சேர்ந்து பொற்றாமரைக் குளத்தில் ஸ்நானம் செய்து, சொக்கேசரைப் பணிந்து போற்றித் தனது குறையிரந்து பின்னர் ராஜசபையை அடைந்தான்.

சங்கு முதலிட்ட பிரதம சிவகணங்களும் குண்டோதரன் முதலிட்பூதவீரர்களும் சேனாவீரர் வடிவம் கொண்டனர். வில், வாள், வேல் ஆகிய பலவகை ஆயுதங்களையும் ஏந்தி விரைந்து வந்தனர். நந்தி, மாகாளன், பிருங்கி, நிகும்பன், கும்போதரன் ஆகிய சிவகணத்தலைவர்கள் எல்லாரும் போர்க் கோலம் பூண்டு குதிரை வீரர்களாகச் சூழ்ந்து வந்தனர். சிவபெருமான் தனது ரிஷப வாகனத்தையே குதிரையாக மாற்றிக் கொண்டார். அதன்மேல் அமர்ந்துகொண்டு ஒற்றைச் சேவகராய்க் காட்சி தந்தருளினார். பேரிரைச்சல் செய்து கொண்டு சேனையானது மதுரையை நோக்கி வந்தது.

சேனையின் வரவு தெரிந்து சுந்தரசாமந்தன் குல பூஷண பாண்டியன் முன்னால் சென்று வணங்கி விண்ணப்பம் செய்தான். பாண்டியன் உளம் மகிழ்ந்தான். கடை வாசலுக்குவந்து அங்கிருந்த மண்டபத்திலே வந்து அமர்ந்தான். சேனைப் பெருக்கத்தின் சிறப்பை நோக்கினான். சேதிராயனைக் கொல்லப்போகும் மகிழ்ச்சி ஏற்பட்டது பாண்டியனுக்கு. எதிரே அணிவகுத்து நின்ற சேனை வீரர்களை யெல்லாம் இனம் தெரிந்து காட்டி அவர்கள் எந்த எந்த நாட்டிலிருந்து வந்தவர்கள் என்பதை முறையாக அறிமுகப்படுத்தினான் சாமந்தன் மன்னனுக்கு. கொங்கம் தொடங்கிச் சோழம் ஈறாகப் பதினாறு நாட்டவர் சேனையை அவரவர் மெய்யினைக் காட்டித் தெரிவித்தான் சுந்தரன். எவ்வளவோ தூரத்திலிருந்தெல்லாம் வீரர்களை வரவழைத்திருக்கிறாயே? என்னே உனது சாமர்த்தியம் என்று என்னைக் கேட்டு விடாதீர்கள். மன்னவரே! தங்கள் பொருள் அனைத்தையும் கட்டுப்பாடின்றிச் செலவழித்ததால் இவர்கள் எல்லாரும் இங்கே வந்திருக்கிறார்கள் என்றும் கூறினான்.

பாண்டியன் பிரமித்துவிட்டான். அந்தச் சேனா சமுத்திரத்திலே சற்றுத் தொலைவிலே ஒற்றைச் சேவகர் குதிரைமீது ஆரோகணித்திருப்பதைக் கண்டான். பாண்டியன் மனம் அவர்பால் சென்றது. உடனே சாமந்தனை நோக்கி, அவர் யார்? என்று வினவிய

தோடு, அவரை எம்மிடம் அழைத்து வருக என்று பணித்தான். இதனையறிந்த ஒற்றைச் சேவகரும் குல பூஷணன் முன்னே வந்தருளினார். பாண்டியன் மிக மிக மகிழ்ந்தான். நவரத்தின மாலைகளையும், பொன்னாடைகளையும் கொடுத்தான். சுந்தரனைத் திருப்திப்படுத்த வேண்டிச் சோமசுந்தரப் பெருமானும் அவற்றை யெல்லாம் ஏற்றுத் தமது பரிவாரங்களுக்கு ஈந்தருளினார். தமது குதிரையைத் தூண்டி ஐந்துவகைக் கதிகளிலும் நடாத்திக் காண்பித்தார். பின்னர் தமது சேனைக்குள்ளே புகுந்து கொண்டார்.

அது சமயம் ஒற்றன் ஒருவன் ஓடிவந்தான். பாண்டியனை வணங்கிநின்று, சேதிராயன் வேட்டையாடச் சென்றிருந்தபோது புலியினால் கொல்லப்பட்டுவிட்டானாம் என்ற சேதியைச் சொன்னான். தன் எதிரே போர் முரசு முழங்கும் சேனையைக் கண்டு மகிழ்ச்சிகொண்ட பாண்டியன் சேனாதிபதியான சுந்தர சாமந்தனுக்குச் சிறப்பான தலைமைப் பதவி அளித்ததுடன் வரிசைகளையும் ஏராளமாகத் தந்தான். இந்தப் படைவீரர்களை யெல்லாம் அவரவர்கள் நாட்டுக்குப் போகுமாறு விடையளித்து அனுப்பிடுக என்றான் பாண்டியன். சுந்தர சாமந்தனும் சேனைகளை அனுப்பி வைப்பது போலப் பாவனை காட்டினான். சோமசுந்தரக் கடவுள் அங்கிருந்தபடியே மனித வேஷங் கொண்ட சேனையராகிய சிவ கணங்களோடு திடீரென மறைந்து அருளினார். அதனைக் கண்டு பேராச்சரியம் கொண்டான் பாண்டியன். எண்ணத்தில் தோன்றிய சந்தேகத்தை தானே உணர்ந்து தெளிவாக்கிக் கொண்டான். சோமசுந்தரப் பெருமான் செய்தருளிய திருவிளையாடலே இது என்று தேர்ந்து ஆனந்த பாஷ்பம் பெருக்கினான். தனது இன்னுயிர்த் துணையான சாமந்தனைப் பார்த்து, சோம சுந்தரப் பெருமான் உனக்காக ஏன் வந்தார் என்றால் எனக்கு அக் கடவுளே நீதான் என்று புகழ்ந்து கூறி அவனுக்குப் பலவகைச் சிறப்புக்களை வழங்கினான்.

பின்னர் உள்ளத்திலே சற்றேனும் கவலையின்றி அரசு செய்து வாழ்ந்து வந்தான் குலபூஷண பாண்டியன்.

*(தொடரும்...)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்